ஞுதலான் இல்பொருளை யுள்பொருளாகவும் உள்பொருளை யில்பொருளாகவுஞ் செய்தற்கண் இழுக்கின்றாகவும் ஆன்மாக்களும் ஆணவமுதலியமலங்களும் அநுதியே யுளவென்றெம்மனோர் கூறுதல் பொருந்தாதென்ப. அவருமறியார் என்னை? முன்னோதியவாற்றாற் சத்தியென்பது ஒரு பொருட்கண்ணதாய்ப் பிறிதொருபொருட்க ணுள்ள சத்தியையெழுப்புவதூஉம், மற்றதனைத் தடைப்படுத்துவதூஉமென்னுந் தொழின்மை யுடையதாகலா னென்பது. இறைவனிடத்துள்ள சத்தியும் அறிவுப்பொருளா யுள்ள அவ்வான்மாக்கட்கு அவ்வறிவையெழுப்புவதூஉம், இயக்கப் பொருளாகிய மலத்திற்கு அவ்வியக்கத்தை யெழுப்புவதூஉம், மற்றச்சத்திகளியங்காவாறு தடைசெய்து நிற்றலு முடையது. இப்பெற்றித்தாகிய சத்தியே சத்தியெனப்படுவதல்லது பிறிதன்றாகலான், இதனைப்பிறவாறுரைப்பார்கூற்றுப் போலியாமென்றொழிக. இதனை யீண்டெடுத்துவிளக்கியது தன்னினமுடித்தலென்னு முத்தியாம் என்றித்துணையுங் கூறுதலான் மாயாவாதி, விவர்த்தவாதி, பரிணாமவாதி, சிவாத்துவிதி முதலியோர்கூறும் மயக்குரையான் மயங்கிச் சித்தாந்தசைவத்துறையி லெடுத்துக் கொள்ளப்படும் சத்தியினிலக்கணங்களாகிய ஆணிமுத்துக்களை யிழவாது பெற்றுக்களிப்புறுவதே பயனாமென்க. இம்மட்டோ, இம்மாயாவாதப்படிற்றது கோலாகாலத்திற்களவில்லை. எமது நாயகரவாகள் "அகரமுதல" என்னுந்திருக்குறளுக்கோர் அரியவுரையெழுதி யுபகரித்திருந்தார்கள். சோமனைப்பார்த்துத் தலைவீங்கிய பிராணியாகிய இவர் "முதற்குறள் வாதம்" என்றொரு வழுவாசகத்திரட்டை வெளிபபடுத்தினர். அதனை மறுத்து யாம் "முதற்குறள் வாத நிராகரணம்" என்னும் வைரத்தம்பம் நாட்டியுள்ளேம். அதனையசைக்காத இவரது வீண்கூச்சலுக்கு அறிஞர் மனமிளையார். இத்தகைய அரிய விஷயங்களைக் கொண்டதாயும், ஸா[illegible]க்களுக்கு மனவுறுதியைப் பயப்பதாயும் விளங்கும் [illegible]ஸத்கிரந்தம் உலகில் நீடுவாழ்க. சுபம். சுபம்.

திரு[illegible]ம்பலம்.

Post Office Registration Number C 428

# THE Dawn Magazine

"THAT MOST USEFUL NATIONAL ORGAN"—*The Hindu*

To

~~Roll No.~~ 359.S.) S. Sivasambhunatha Iyer,
Sanskrit Student
Tiruparankunram P.O.
Madura Dt

In case of non-delivery to be returned to MANAGER—
THE DAWN MAGAZINE
Box 363, CALCUTTA